SRI S. B. ADITYAN : 1958-ம் வருஷம் ஜூன் மாதம் 1-ந்தேதியிலிருந்து குலசேகரப்பட்டணம் துறைமுகத்தில் இறக்குமதிக் கட்டணம் புதிதாக வசூல் செய்யப்பட்டிருக்கிறது. இறக்குமதி செய்வதற்கு ஜட்டி, பாலம் போன்ற எவ்விதமான வசதியும் செய்து கொடுக்கப்படாமல் இந்த வரியை மாத்திரம் வசூலிக்கக் காரணம் என்ன ?

THE HON. SRI P. KAKKAN : இந்தத் துறைமுகமானது ரொம்ப நாளாக அபிவிருத்தி செய்யப்படாமல் இருக்கிறது. அதை அபிவிருத்தி செய்யவேண்டும் என்பதற்காகத்தான் இந்த வரி வசூலிக்கப் படுகிறது.

*Sheep breeding farm*

* 13 *Q.*—SRI P. S. SANTHANAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வடஆற்காடு ஜில்லா, செங்கம் தாலூகாவில் ஆடு வளர்ப்புப் பண்ணை ஒன்று ஏற்படுத்த அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா ?

(ஆ) அப்படியானால், எப்போது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) The question does not arise.

*Taluk treasuries*

* 14 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

தாலூகா கஜானாக்கள் பார்த்துவந்த பண பட்டுவாடா வேலையை ஸ்டேட் பாங்குகள் வசம் விடக்காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : According to the Reserve Bank of India Act, 1934, the Reserve Bank of India are the Bankers of the Government. The State Bank of India are the sole agents of the Reserve Bank of India at all places where there is a branch of the State Bank of India and where there is *no* branch of the banking department of the Reserve Bank of India. In view of the above relationship when the State Bank of India open their branches in the places, where non-banking sub-treasuries exist, those branches of the State Bank naturally take over Government business as agents of the Reserve Bank.

This transfer of Government cash business results in certain definite administrative advantages to the Government as indicated below :—

(1) The Government do not have to lock up any portion of their resources in the form of cash balance in treasuries to meet their day to day transactions.

(2) With transfer of the cash business to the branches of the State Bank of India, the currency chest containing large sums of money maintained by sub-treasury is also taken over by the Bank, and the transactions of the Government irrespective of their volume are conducted by the Bank without any extra cost to the Government.

3rd September 1958]

(3) Due to the transfer of cash business, a small reduction in the strength of the sub-treasury staff is also found possible, and this goes to reduce the expenditure on the administration of the sub-treasury.

**Sri N. R. THIAGARAJAN** : இரண்டும் வெவ்வேறு இடங்களில் இருப்பதால் பொது ஜனங்களுக்கு அதிக அசௌகரியம் ஏற்படுகிறது. நிர்வாக அசௌகரியம் எதுவும் இல்லையென்றால் இவ்விரண்டையும் ஏன் ஒரேயிடத்தில் வைக்கக்கூடாது என்று கேட்கிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : ஒரேயிடத்தில் வைக்கவேண்டுமானால் அதற்கு வசதியான பெரிய கட்டிடம் கிடைக்கவேண்டும். மேலும் இரண்டும் வெவ்வேறு இடத்தில் இருப்பதனால் அதிகக் கஷ்டம் ஏற்படுமென்று நான் எதிர்பார்க்கவில்லை. கஷ்டம் இருப்பதாக எடுத்துச் சொன்னால் அதை நிவர்த்திக்க ஏதாவது ஏற்பாடு செய்யலாம்.

**Sri V. K. RAMASWAMY MUDALIYAR** : Is there any proposal to extend the scheme to the whole of the State and if so, when will the scheme materialize?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : Yes, Sir, the State Bank of India has got a programme to open many more branches in the State. But it is for that Bank to decide where they should be opened.

**Sri R. SRINIVASA IYER** : ஸ்டேட் பாங்க் ஓரிடத்திலும், டிரஷரி ஓரிடத்திலும் இருப்பதனால் இரண்டு கணக்குகள் வைக்கப்பட்டிருக்கிறது. இங்கு டோக்கன் வாங்கிக் கொண்டு அங்கு போய் பணம் வாங்குவது என்பது ஒருநாளில் முடிகிறதாகவும் இல்லை. அதனால் ஜனங்களுக்கு சிரமம் உண்டாகிறது. இரண்டு கணக்கையும் ஓரிடத்தில் வைத்துக்கொண்டோ, அல்லது ஸ்டேட் பாங்கு குமாஸ்தாவை டிரஷரியிலேயே இருக்கச் செய்தோ ஒரே இடத்தில் பட்டுவாடா செய்ய ஏற்பாடு செய்யப்படுமா என்று கேட்கிறேன் ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : டிரஷரி சென்னை சர்க்கார் நடத்தக்கூடியது. ஸ்டேட் பாங்கு மத்திய நிர்வாகம். பாங்கு தொடர்பைத் தவிர நமக்கு ஸ்டேட் பாங்கோடு சம்பந்தம் கிடையாது. இரண்டையும் ஒரே ஸ்தாபனமாக வைப்பது முடியாது. அதில் கஷ்டம் இருக்குமென்று நினைக்கிறேன்.

**Sri S. B. ADITYAN** : சென்னை ராஜ்யத்தில் நடத்தப்படும் ஸ்டேட் பாங்கின் மூலம் டெல்லியாருக்கு (மத்திய அரசாங்கத்திற்கு) ஏராளமான லாபம் கிடைக்கிறது. அந்த லாபத்தில் சென்னை அரசாங்கத்திற்கு ஏதாவது பங்கு உண்டா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இது போன்ற உணர்ச்சி, அதாவது இங்கே கிடைக்கும் பெரிய லாபத்தை மற்றவர்கள் எடுத்துக்கொண்டு போகிறார்கள் என்ற ஒரு மாயையான உணர்ச்சி கனம் அங்கத்தினரின் மனதில் எப்போதுமே இருந்துகொண்டிருக்கிறது. இங்கே நடத்தப்படும் ஸ்டேட் பாங்கினால் மத்திய அரசாங்கத்திற்கு எந்த விதமான லாபமும் இல்லை, நமக்குத்தான் லாபம்.

**Sri M. D. THIAGARAJA PILLAI** : பொது மக்கள் டிரஷரியில் ஒரு நாள் டோகன் வாங்கவேண்டியிருக்கிறது ; மறு நாள் பாங்கிக்குப் போய் பணம் வாங்க வேண்டியிருக்கிறது., ஒரே நாளில் டோகனையும் பணத்தையும் அவர்கள் வாங்க முடியவில்லை.

[3rd September 1958

ஒரே நாளில் டோகனையும் பணத்தையும் வாங்குவதற்கு ஏற்ற வகையில் ஸ்டேட் பாங்குக்கு உடனுக்குடன் தகவல் தெரிவிக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தக் கஷ்டத்தைத்தான் மற்ற கனம் அங்கத்தினர்களும் குறிப்பிட்டார்கள். இதை நிவர்த்திக்க என்ன ஏற்பாடு செய்வது என்று யோசிக்கப்படும்.

## *Poramboke lands*

*15 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கன்னியாகுமரி ஜில்லா, விளவங்கோடு தாலூகா, கலியல் ரேஞ்சு குலப்பாரையிலுள்ள புறம்போக்கு நிலங்களில் சாகுபடி செய்துகொண்டிருந்த விவசாயிகள் எவரேனும் பனிச்சமுட்டிலுள்ள கான்வென்ட் அதிகாரிகளால் வெளியேற்றப்பட்டார்களா ?

(ஆ) விவசாயிகள் சட்டத்தை மீறி நிலங்களை ஆக்கிரமித்தார்கள் என்பதற்காகவும் அத்துமீறி அவற்றில் பிரவேசித்தார்களென்பதற்காகவும் தொடரப்பட்ட வழக்குகளில் எத்தனை பைசலாகமல் உள்ளன ?

(இ) மேற்படி புறம்போக்கு நிலங்களை மீண்டும் ஸர்வே செய்து அவற்றை நிலமில்லாத ஏழை விவசாயிகளுக்கு ஒப்படை செய்வதற்கான உத்தேசம் ஏதாவது இருக்கிறதா ?

(ஈ) அப்படியானால், அதுபற்றி விவரங்கள் யாவை ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) No encroachment cases have been filed for unauthorised occupation in the area.

(*c*) & (*d*) There is no proposal to resurvey the poramboke land in question at present.

## *Green fodder*

* 16 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of Municipalities where drainage water is used to raise green fodder; and

(*b*) whether the Government propose to extend the scheme to all Municipalities?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Thirteen including the Corporation of Madras.

(*b*) This question is under consideration.

SRI S. LAZAR : இப்படிப்பட்ட சாக்கடைகள் திருச்சிபோன்ற நகரங்களில் காவிரி ஆற்றில் கலந்துவிடுவதன் காரணமாக மக்கள் மிகவும் அவதிப்படுகிறார்கள். ஆகையால் திருச்சி போன்ற நகரங்களிலாவது இந்தத் திட்டத்தை அமல் நடத்த சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தத் திட்டம் இப்போது ஸ்ரீரங்கத்தில் அமலுக்கு வந்திருக்கிறது. இதை திருச்சியில் கொண்டு வருவதுபற்றி பிற்பாடு ஆலோசிக்கப்படும்.